# 17

# நான் ஒண்ணும் நளாயினி இல்லை

-ஜோதிர்லதா கிரிஜா.

**ரா**ஜிக்கு இதயம் தடதடத்துக் கொண்டிருந்தது. ரமணன் குழந்தைக் காப்பகத்துக்கு மறக்காமல் போய்க் குழந்தையை எடுத்துக் கொண்டு வருவானா இல்லாவிட்டால் தனக்கே உரிய மறதியுடன் எங்கேயாவது ஊர் சுற்றப் போய் விடுவானா என்ற கவலையால் தான். இன்று பார்த்து அவனது அலுவலகத் தொலைபேசி இணைப்புக் கிடைப்பேனா என்றது. உண்மையாகவே லைன் கிடைக்கவில்லையா, இல்லாவிட்டால் கெட்டுப் போயிருந்ததால் கிடைக்கவில்லையா என்பது தெரியவில்லை. தொலைபேசி டயலைச் சுழற்றிச் சுழற்றி ஆள்காட்டி விரல்முனை எரியத் தொடங்கியதில், அவள் நடுவிரலால் அதைச் சுற்றிக் கொண்டிருந்தாள்.

''ராஜி உன்னை ஆபீசர் கூப்பிடறார். ரொம்ப நேரமா டயல் பண்றே போலிருக்கே. கனெக்ஷன் கிடைக்கலையா? நான் வேணாப் பண்ணிப் பார்க்கட்டுமா? யாருக்கு என்ன சொல்லணும்கிறதைச் சொல்லிட்டுப் போ!'' என்றபடி அருணா எதிரில் வந்து நின்றாள்.

ராஜி விஷயத்தைச் சொல்லிவிட்டு, ''அவரைக் கூப்பிட்டு நீயே சொல்லிடேன்... க்ரேஷ்(Creche) க்குப் போய்க் குழந்தையை எடுத்துண்டு ஆத்துக்குப் போகணும்... மறந்துட்டார்னா என்ன பன்றது. அதான்.... '' என்று கூறியவாறு ராஜி எழுந்து கொண்டாள்.

அருணா பெரிதாய்ச் சிரித்தாள். ''நமக்குத்தான் குழந்தை மேல அக்கறைங்கிறது நாம பண்ணிக்கிற கற்பனை, அவாளுக்கும் உண்டுடி''

''இதபாரு, சொன்னதைச் செய், உனக்கு என் ஹஸ்பண்டைத் தெரியாது, '' என்று எரிச்சலாய்ச் சொல்லிவிட்டு ராஜி அலுவலரின் அறை நோக்கிப் போனாள்.

அருணா உதட்டைப் பிதுக்கிவிட்டு ரமணனின் தொலைபேசி இலக்கத்தைச் சுழற்றலானாள்...

''கூப்பிட்டீங்களாமே, சார்''

'' ஆமா அந்த எஸ்டாப்ளிஷ்மென்ட் ரெஜிஸ்டர் அப்-டு டேட்டா இருக்கா?''

''இன்னும் கொஞ்சம் பாக்கி இருக்கு, சார்.... என் தப்பில்லே, சார் என் ப்ரிடிசெஸ்ஸர், பானுமதி, அரை குறையா வெச்சுட்டுப் போயிட்டாங்க. அதனாலதான்....''

''இப்படியே எல்லாரும் சொல்லுங்க. ஸ்டாஃப் செக்ஷன் சடகோபன் என்னடான்னா அவரோட ப்ரிடிசெஸ்ஸர் கணேசன் மேல பழி போடறார்...''

''அவங்களைப் பத்தி எனக்குத் தெரியாது, சார். நான் சொல்றது உண்மை. வேணா அந்த ரிஜிஸ்டரை இப்ப எடுத்துண்டு வந்து காமிக்கிறேன். எவ்வளவு என்ட்ரீஸ் பாக்கி இருக்குங்கிறதை நீங்களே பாருங்கு, சார்....''

''நான் உங்களை நம்பாம பேசல்லை மிஸஸ் ரமணன். அவங்கவங்க வேலையை அப்பப்ப முடிச்சு கரெக்ட்டா வெச்சா இப்ப இப்படி அவஸ்தைப்பட வேண்டாம், பாருங்க. கவர்ன்மெண்ட் ஆபீஸஸ்ல பனிஷ்மெண்ட் பத்தாது. இதுவே கம்பெனியா இருந்தா வீட்டுக்கு அனுப்பிவிடுவாங்க....''

ராஜி மவுனமாய் நின்றாள்.

''சரி, நீங்க போய் உங்க வேலையைப் பாருங்க. வேலை முடியலைன்னா ஓவர்டைம் போட்டுக்குங்க.''

'யாருக்கு வேணும் உங்க ஓவர்டைம்? காலாகாலத்துல வீட்டுக்கு அனுப்புங்க. அது போதும். வேலை செய்யாதவங்களை அப்பப்ப கவனிச்சுத் தட்டிக் கேக்கறதுக்குத் துப்பு இல்லே. இன்ஸ்பெக்ஷன் டைம்ல ஆலாப் பறந்தாறது'- மனசுக்குள் இப்படிச் சொல்லிக் கொண்டு, ''எஸ் ஸார்!'' என்றாள்.

... ''என்னடி, என் ஹஸ்பண்ட் கிடைச்சாரா?''

''இல்லேடி ராஜி...இதபாரு. குழந்தையை யாரும் மறந்து போக மாட்டாங்கடி, நீ கவலைப்படாம வேலையைப் பாரு. க்ரேஷ்ல டெலிஃபோன் இருக்கா?''

''இல்லியே, இருந்தா அங்க ரிங் பண்ணி அவர் வரலைன்னா தகவல் குடுக்கச் சொல்லலாமே?''

...அருணாவின் புத்திமதிப் படியும், அவள் ஊட்டிய நம்பிக்கையைக் கெட்டியாய் பற்றிக் கொண்டும் ராஜி வேலையில் ஆழ்ந்து போனாள்.

நாலரை மணிக்கு மறுபடியும் ஒரு முறை முயன்றபோது, ரமணன் நாலுக்கெல்லாம் கிளம்பிப் போய்விட்டதாய்த் தகவல் கிடைத்தது. ராஜியின் முகத்தில் அதற்குப் பிறகுதான் மலர்ச்சி வந்தது. ''பாத்தியா? நான் சொல்லலலே? தாய்க்குத்தான் அன்புன்னு நினைக்காதேடி, தகப்பனுக்கும் உண்டு'' என்று அருணா சிரித்தபோது ராஜி வாயே திறக்கவில்லை...

...அலுவலகத்தை விட்டு அவள் புறப்பட்டபோது மணி ஆறே முக்கால், ஏழுமணிக்குக் கிடைத்த பேருந்தில் ஏறி அவள் வீடு போய்ச் சேர்ந்தபோது மணி எட்டு. பூட்டிக் கிடந்த கதவைப் பார்த்ததும் ராஜிக்குப் பக்கென்றது. பக்கத்து வீட்டில் விசாரித்தாள். ரமணன் வரவில்லை என்று சொன்னார்கள். குழந்தைக் காப்பகம் தேனாம்பேட்டையில் இருந்தது. அவள் இருந்தது அண்ணா நகரில், பேருந்து பிடித்துப் போய் விசாரித்து வரலாம் என்றால் போய்ச் சேரும்போதே கட்டாயம் மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிடும். அதற்கு மேல் எப்படி பயமற்று வீடு திரும்புவது? மனசு திக்திக் என அடிக்க, அவள் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போய் விளக்கைப் போட்டாள்.

...'ஒரு வேளை குழந்தையை அழைச்சுண்டு எங்கே யானும் வெளியில போயிருப்பாரோ? ரெண்டு வயசுக் குழந்தையை வெளியில அழைச்சுண்டு போய் வேடிக்கை காட்ட என்ன இருக்கு? நாலு வயசுன்னாலும் பரவாயில்லே. வழியில ஸ்கூட்டர் ஏதானும் ட்ரபிள் குடுத்திருக்குமோ? ஓட்டலுக்குப் போய் ஏதாவது டிபன் வாங்கிண்டு வந்துடறேன்னு வேற சொன்னார்... ஒருவேளை ஆபீசைவிட்டுக் கிளம்பறதுக்கு அவருக்கே நாழி ஆயிருக்குமோ? அதெப்படி? நாலுக்கெல்லாம் கிளம்பி போய்ட்டதாச் சொன்னாளே?... ஒரு வேளை ஏதானும் ஆக்ஸிடென்ட்...?'-ராஜியின் அச்சமும் திகிலும் அதிகரிக்க, அவள் கண்களில் கண்ணீர் சுரக்கத் தொடங்கியது.

அனுமாரின் படத்துக்கு முன்னால் போய் நின்று வேண்டத் தொடங்கினாள். எவ்வளவு நேரம் அப்படி நின்றாளோ, தெரியாது. கூப்பிடு மணியின் அழைப்புக் காதில் விழுந்ததும் ஓடிப்போய்க் கதவைத் திறந்தாள். ஸ்கூட்டர் ஓசை கூடக் காதில் விழாத அளவுக்குத்தான் மெய்மறந்து நின்றது புரிய, ஆவலுடன் குழந்தையை வாங்கிக் கொண்டாள்.

''ஏன் இவ்வளவு லேட்? நான் பதறிப்போய்ட்டேன் ''என்றவாறு ரமணனைக் கூர்ந்து பார்த்தாள். தனது பார்வையை அவன் தவிர்த்தது போல அவளுக்குப்பட்டது.

''எனக்கும் நேரமாயிடுத்து இன்னிக்குப் பார்த்து, எங்க ஆபீஸ்ல ஒரு திடீர் இன்ஸ்பெக்ஷன்...''

'நாலுமணிக்கே நீங்க கிளம்பிட்டதா உங்க செக்ஷன்ல சொன்னாளே?' என்று கேட்க வாயெடுத்துச் சொற்களை உள்வாங்கிக் கொண்டாள். 'ஒரு வேளை ஆபீஸ் விஷயமாவே நாலுக்கு வெளியில போய் மறுபடியும் திரும்பி வந்திருக்கலாம். அது தெரியாத எவனோ கிளம்பிட்டதா சொல்லி இருப்பானோ? இல்லைன்னா... சரி. எப்படி இருந்தாலும் எதையும் இப்ப கேக்கக் கூடாது...'

''க்ரேஷ்ல கோவிச்சுக்கலையா?''

''கோவிச்சுண்டா. அதிகப்படியா ரெண்டு மணி நேரம் கவனிச்சுண்டதுக்குப் பத்து ரூவா வாங்கிண்டுட்டா...''

''தப்புன்னு சொல்ல முடியாது. அப்பத்தான் அவாவாளுக்குச் சீக்கிரம் போய்க் குழந்தையை எடுத்துண்டு போக அக்கறைவரும். இல்லைன்னா நீட்டி நெளிச்சுண்டு சினிமா, ட்ராமா, பீச்னு போய்ட்டு அங்க போகத் தோணுமே?''

கன்னங்குழியச் சிரித்த குழந்தையை இறுக அணைத்து முத்தமிட்டபடி அவள் சோஃபாவின் மீது சரிந்தாள். அவன் மின்விசிறியைச் சுழலவிட்டுக் காலணிகளை உதறிவிட்டு, ''அப்பாடா!'' என்றபடி அவளுக்கு அருகில் அமர்ந்தான்.

''காப்பி கொண்டு வர்றீயா?''

''மணி எட்டாச்சே? காப்பி வேணாப் போடறேன். ஆனா எனக்கு ஒரே அலுப்பாயிருக்கு. நீங்க டிபன் வாங்கிண்டு வந்திருக்களோல்லியோ? அதைச் சாப்பிட்டுட்டு வேணாக் காப்பியைக் குடிக்கலாம்!''

''அடடா. டிபன் வாங்கணும்கிற ஞாபகமே இல்லே.''

''ஸ்கூட்டரை எடுத்துண்டு போய் வாங்கிண்டு வந்துடுங்களேன்...''

அவன் சோஃபாவின் முதுகில் தன் முதுகை விரிகோணமாய்ச் சரித்துக் கொண்டு தலையை அதன் விளிம்பில் வைத்து அண்ணாந்து நெடியதாய் ஒரு கொட்டாவியை உதிர்த்து விட்டு, ''என்னால முடியாது! ஒரே டயர்டா இருக்கு. சின்னதா ஒரு சமையல் பண்ணிடேன். அதுக்கு முன்னாடி ஒரு கப் காப்பியக் குடிச்சுட்டா ஒன்பது - ஒன்பதரைக்குச் சாப்பிட்டுடலாம்!'' என்றான்.

''சமையலா? இம்புட்டு நாழிக்கு மேலயா?''

''சின்னதாச் சமைக்கிறதுக்கு ஒரு மணி நேரம் பத்தாதா? ஒரு சாதம். குக்கர்ல வெச்சுட்டா நிமிஷமா ஆயிடும். ஒரு மிளகு ரசம். உருளைக்கிழங்குக் கறி பண்ணிடு.''

''உருளைக்கிழங்கு வாங்கிண்டு வந்திருக்கேளா என்ன?'' என்று ராஜி எகத்தாளமாய்க் கேட்டாள்.

''அன்னிக்கு நீ வாங்கிண்டு வந்தியே?''

''அன்னிக்கு வாங்கினது இன்னிக்கு இருக்குமா? எல்லாம் வயித்துல போயாச்சு.''

''அப்ப பருப்புத் துகையல் அரைச்சுடேன்!''

''மத்தியானம் விளக்கெண்ணெய் சாப்பிட்டேளா?''

ராஜி எரிச்சல்பட்டுக் கொண்டிருந்தது இப்போதுதான் புரிய, அவன் அவளை முறைத்தான்.

''மிக்சி ரிப்பேரா இருக்கே? ஞாபகமில்லியா? ரிப்பேருக்கு உங்ககிட்ட சொல்லி எத்தனை மாசம் ஆச்சு?''

''எங்கம்மால்லாம் மிக்சியும் சிக்சியும்தான் வெச்சுண்டு வேலை பண்ணினாளாக்கும்?''

''உங்கம்மா ஆபீசுக்குப் போய்ச் சுளையா ஆயிரத்தைந்நூறு ரூவா கொண்டு வந்தாளா?''

அண்ணாந்திருந்த தலையை உசுப்பிக் கொண்டு நேராய் நிமிர்ந்து உட்கார்ந்து அவன் கண்களை மலர்த்தி அவளைப் பார்த்தான்.

''என் சம்பளம் ஆயிரந்தான். ரெண்டாயிர ரூவா சம்பளக்காரனாப் பார்த்துப் பண்ணிக்கிறதுதானே?''

''என்ன பேத்தறேள்? நீங்க உங்கம்மாவைப் பத்திப் பேசினேள். நான் என்னைக் கம்ப்பேர் பண்ணிப் பதில் சொன்னேன். இதுல நீங்க ஏன் உங்களைச் சம்பந்தப்படுத்திக்கிறேள்?''

''.........''

''இதோட எத்தனையோ தரம் சொல்லிட்டேன்.''

''அது மாதிரி என்னை நீதான் பேசவைக்கிறே''

''உங்களுக்க ஒரு காம்ப்ளெக்ஸ். உங்களுக்கு வேண்டியும் இருக்கு. வேதனையும் பண்றது. வேலையை விட்டுட்டு உங்களுக்கு வாய்க்கு ருசியாச் சமைச்சுப் போட்டுண்டு இருக்க நான் ரெடி. சம்மதிப்பேளா?''

''வீட்டைக் கட்டிட்டமே? எப்படிச் சமாளிக்கிறது?''

''அப்ப வாயை மூடிண்டு இருங்கோ. அன்னிக்குக் கணக்கு நோட்டில பக்கத்துல பக்கத்துல நம்ம ரெண்டு பேருடைய சம்பளத்தையும் எழுதினதுக்கே மூஞ்சியத் தூக்கி வெச்சுண்டேள். கணக்குன்னு வரச்சே எழுதித்தானே தீரணும்? எழுதாம இருந்தா அதுக்கும் ஒரு அர்த்தம் கண்டு பிடிப்பேள்...''

''இப்ப நீ சமைக்கப் போறியா இல்லியா, அதைச் சொல்லு. முதல்ல காப்பி வேணும் எனக்கு.''

''எனக்கு ஒரே அலுப்பா இருக்கு. கூட்டிக்கூட்டிக் கண்ணெல்லாம் எரியறது. தலைவலி மண்டையைப் பிளக்கிறது.''

''அதான் காப்பி சாப்பிடலாம்கறேன்.''

ராஜ் பதில் சொல்லாமல் தூங்கத் தொடங்கி இருந்த குழந்தையைப் படுக்கையில் கிடத்திவிட்டுத் தானும் அதன் அருகே விழாக்குறையாகப் படுத்தாள்.

''ஸ்கூட்டர்ல போய் டிபன் வாங்கறதுக்கு உங்களுக்கு அலுப்பான அலுப்பு. நான் இப்ப எழுந்து காப்பி போட்டுட்டுச் சமையலும் பண்ணணுமாக்கும்? என் உடம்பு மட்டும் இரும்பாலயா பண்ணி இருக்கு?

''பொம்பளைகள் படிக்கப்படாதுங்கிறது இதுக்குத்தான். லா பாய்ன்ட் பேசறது''

''பொம்பளைகள் படிச்சுட்டு வேலைக்குப் போய்ச் சம்பாதிச்சுண்டு வந்து நாலு காசு குடுக்கணும். ஆனா நியாயத்தைக் கேட்டு வாயைத் தொறக்கக்கூடாது அதுல மட்டும் படிக்காத பொண்ணாட்டமா சிலையா நிக்கணும். ஸ்கூட்டர் லோன், ஹவுசிங் லோன், லொட்டு லொசுக்குன்னு எல்லாத்துக்கும் அவ சம்பாத்தியம் வேணும். ஆனால் வாயைத் திறந்து தன் சம்பளத்தைப் பத்தி அவ பேசிடக்கூடாது. நல்ல நியாயம்.''

''சும்மா வளவளன்னு அநாவசியமாப் பேசாதே. உன்னோட சம்பளத்துல உங்கப்பாம்மா உன் கல்யாணத்துக்குப் பத்தாயிரம் சாமர்த்தியமாகக் கடன் வாங்கிண்டா. அதைச் சொல்லேன் பார்ப்போம்.''

''அதுக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? அது நம்ம கல்யாணம் நடக்கிறதுக்கு முந்தி நானே முழு மனசோட எங்கப்பாவுக்கு என் கல்யாணச் செலவுக்கு வாங்கிக்குடுத்த கடன். அதைக் கேக்கறதுக்கு நீங்க யாரு?''

ரமணன் ஆத்திரத்துடன் எழுந்து நின்று முறைத்தான்.

''அந்தக் கடன் நம்ம கல்யாணத்துக்கு அப்புறந்தானேடி அடைபட ஆரம்பிச்சுது? உன் சம்பளத்துல மாசா மாசம் இருநூறு ரூவா கொறஞ்சுதோ? கிட்டத்தட்ட மூணு வருஷம் அடைச்சியேடி?''

''இந்தாங்கோ, என்ன இது புதுசா டீ போட்டுப் பேசறேள்? மரியாதையைக் குடுத்து மரியாதையை வாங்கிக்கணும் மனுஷா. அதான் பத்தாயிரம் வரதட்சிணை வாங்கிண்டேளே? அதுக்கும் இதுக்கும் சரியாப் போச்சு...''

''ஒரு மிளகு ரசம் வெச்சுப் பருப்புத் துகையல் அரைன்னு சொன்னதுக்கா இந்தப் பேச்சுப் பேசறே?''

''அதுக்கா இந்தப் பேச்சு வந்தது? அம்மியில அரைங்கிற மாதிரி பேசினேள். ஏன்? மிக்சி இல்லாட்டா என்ன? நான் அரைச்சுத்தறேன்'னு சொல்றது? அரைச்சா தேஞ்சா போயிடுவேள்? நீங்க போய் உங்க ஆபீஸ்ல கிழிக்கிறதைத் தானே நான் எங்க ஆபீஸ்ல கிழிச்சிட்டு வறேன்; எங்களுக்கு மட்டும் அலுப்பு சலிப்பு ஒண்ணுங்கிடையாதா? இல்லே? கிடையாதான்னு கேக்கறேன். வீட்டுல அத்தனை காரியமும் நான்தான் செய்யணும். வேலைக்காரி வரல்லைன்னா அந்த வேலை வேற என் தலையில.''

''முனியம்மாவுக்குப் பதிலா நீ பத்துப் பாத்திரம் தேய்ச்சு வீடு பெருக்கிப் புடைவை தோய்டாங்கிறயா?''

''என்ன தப்பு அதுல? காந்தி கக்கூஸ் கழுவினாரே.''

''நான் ஒண்ணுங் காந்தி இல்லே.''

''காந்தியைப் பத்திக் கட்டுரை படிச்சுக் காலேஜ் அன்னிவர்சரியில பர்ஸ்ட் ப்ரைஸ் வாங்கின ஹிப்போக்ரிட் தெரியுமே? அதையும் நீங்க பீத்திண்டுதான் எனக்குத் தெரியும்... சும்மா கட்டுரை எழுதினாப்ல ஆச்சா? ஒரு நாளாவது கக்கூஸ் கழுவி இருக்கேளா? ஞாயித்துக் கிழமை ஞாயித்துக்கிழமை நான் தானே கழுவறேன்? சமைக்கிறது முழுக்க முழுக்க நானு. ஞாயித்துக் கிழமை துளியானும் ரெஸ்ட் எடுத்துக்க விடறேளா? 'இன்னிக்கு அமர்க்களமா இருக்கணும் சமையல்'னுடறேள். ஒரு வாரத்துக்கு வேண்டிய துணிமணிகளை நான்தான் துவைச்சுக்கணும். உங்க அண்டர் வேரை ஒரு நாள் நீங்க கசக்கிண்டது உண்டா? ஆபீஸ்லவேற வேலை ஹெவி எனக்கு. குழந்தையை க்ரேஷ்ல கொண்டு போய் நான்தான் காலம் பெற விட்டுட்டு அப்படியே ஆபீஸ் போகணும். சாயந்தரம் திரும்பும்போதும் நான்தான் கூட்டிண்டு வரணும். சாயந்திரம் ரெக்ரியேஷன் க்ளப்ல உக்காந்துண்டு வெத்தலையைக் கொதப்பிண்டு சீட்டாடறதுக்கும் கேரம் ஆட்றதுக்கும் உங்களுக்கு நேரம் இருக்கும். குழந்தையைக் கூட்டிண்டு வர்றதுக்கு நேரம் இருக்காது. காலம்பெற ஒருத்தர் சாயந்தரம் ஒருத்தர்னோ, இல்லைன்னா இன்னிக்கு நீ, நாளைக்கு நான்னோ முறை போட்டுண்டு செய்யறது தானே நியாயம்? இந்த அல்ப நியாயம் கூடவா மனுஷாளுக்குப் புரியாது?...''

''மூச்சு விட்டுக்கோ.''

''மூச்சு அப்படியே போயிட்டாக்கூடத் தேவலைன்னு தான் தோன்றது. அண்டர்ஸ்டாண்டிங் இல்லாதவாளோட வாழற வாழ்க்கை என்ன வாழ்க்கை... இன்னும் நிறைய இருக்கு அடுக்கிண்டே போறதுக்கு...பேசி முடிச்சுடறேன். பிடிக்கலைன்னா காதைப் பொத்திக்குங்கோ...''

ரமணன் விருட்டென்று நடந்து பாத்ரூமுக்குள் புகுந்து கொண்டான். இத்தனை நாட்களும் தான் மனத்துள் வைத்து மறுகி வந்திருக்கும் குறைகளை யெல்லாம் இன்று சொல்லி முடித்தேவிடுவது என்ற முடிவுடன் ராஜி அவன் திரும்பக் காத்திருந்தாள். இன்னும் என்னென்ன பாக்கி இருக்கின்றன பேச என்று மனசுக்குள் பட்டியல் போடலானாள்.

ஒரு நிமிடம் கூட ஆகி இருக்காது. அழைப்பு மணி ஒலித்தது. எழுந்து சென்று கதவைத் திறந்தாள். ரமணனின் அலுவலக நண்பன் மணி நின்றிருந்தான்.

''உள்ளே வாங்கோ.''

''இல்லே. ரொம்ப நாழியாச்சு. ரமணன் குழந்தையை அழைச்சுண்டு ஒரு வழியா வந்து சேர்ந்துட்டானான்னு தெரிஞ்சுண்டு போறதுக்காக வந்தேன்.''

ராஜி விழித்தாள். ஆனால் அவனே பேசட்டும் என்று காத்திருந்தாள்.

''நாலரை மணிக்கு உங்க ஃப்ரண்டு அருணா போன் பண்ணினாங்க. ரமணனை க்ரேஷ்க்குப் போறதைப் பத்தி ஞாபகப்படுத்தறதுக்காக. ஆனா அவன் மறந்து போய் மாட்டினிக்குச் சில ப்ரண்டஸோட போய்ட்டான். இது தெரியாம அவன் நாலுக்கே கெளம்பிட்டதா யாரோ ஆன்ஸர் பண்ணிட்டா. இது தெரிஞ்சதும் நான் எங்க ப்யூனைத் தியேட்டருக்கு உடனே அனுப்பி விஷயத்தைச் சொல்லச் சொன்னேன். எனக்கு வேற அவசரவேலை இருந்ததால் என்னால செய்ய முடியல்லே. ப்யூன் நல்லா தண்ணி போட்டிருந்தான். ஒழுங்காப் போய்ச் சொன்னானா இல்லியான்னு வேற கவலை எனக்கு. அதான் கேட்டுட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''உள்ளே வாங்கோ.''

''இல்லே. ரொம்ப நாழியாச்சு. நான் வர்றேன். குழந்தையும் அவனும் வந்துட்டாங்களா? சொல்ல மாட்டேங்கறீங்களே?''

''வந்துட்டாங்க...''

''அப்ப நான் வறேன். குட் நைட்...''

கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே வந்த ராஜிக்கு வார்த்தைகளுக்கு அடங்காத ஆத்திரம் மூண்டது.

அவன் திரும்பியதும், ''உங்க ஃப்ரண்ட் மணி வந்துட்டுப் போனார். இப்பதான். உங்க வண்டவாளமெல்லாம் வெளியாயிடுத்து. க்ரேஷ்லேருந்து குழந்தையை அழைச்சுண்டு வாங்கோன்னு சொல்லி இருக்கேன். படிச்சுப் படிச்சு? அதெப்படி மறப்பேள்? இந்த வெக்கக்கேட்டை யார்கிட்டப் போய்ச் சொல்றது?''

அவன் பதில் சொல்வதற்குள் குழந்தை சிணுங்கியது. அதற்குப் பாலைக் கரைத்துக் கொடுத்துவிட்டு ராஜி நினைவாக விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தாள்.

''நீங்க இன்னிக்குப் பண்ணி இருக்கிற கூத்துக்கு உங்களுக்கு மன்னிப்பே கிடையாது.''

''சரிதான். வாயை மூடு. மறதி எல்லாருக்கும் வறதுதான்.''

''எது? இந்த மறதியா? பெத்த குழந்தையை மறந்துட்டு சினிமாவுக்குப் போறதா? பேஷ்! யார்ட்டையானும் சொல்லிப் பாருங்க...''

''சரி, சரி வாயை மூடு. உனக்கு இன்னிக்கு என்ன ஆச்சுன்னு, தெரியல்லே. அளவுக்கு மீறி வாயைக் காமிக்கிறே. ஆம்படையானைப் பார்த்து நீயும் கக்கூஸ் கழுவு, பாத்திரம் தேயி, சமையல் பண்ணுன்னெல்லாம் சொல்ற பாரத நாரிமனி நீ ஒருத்தியாத்தான் இருப்பேன்னு நினைக்கிறேன்...''

''அதுல எனக்கொண்ணும் அவமானமில்லே. இனியும் என்னால தாங்க முடியாது. நானும் போனாப் போறது, போனாப் போறதுன்னு இந்த மூணு

வருஷமாய்ப் பொறுத்துண்டு இருந்திண்டிருக்கேன். இதுக்கு ஒரு முடிவு கட்டியாகணும். என் குழந்தை எனக்கு எல்லாத்தையும் விடப்பெரிசு. என் குழந்தை நன்னாருக்கணும்னா நான் நன்னா இருந்தாகணும். இப்படிப் பதினெட்டு மணி நேரம் உழைச்சா பொசுக்னா ஒரு நாள் படுக்கையில அரை உசிரா விழுவேன், இல்லைன்னா செத்தே போனாலும் போயிடுவேன்... இத பாருங்கோ. நன்னாக் காது குடுத்துக் கேளுங்கோ. நான் நிஜமாத்தான் இதையெல்லாம் சொல்றேன். நானென்ன மனுஷியா, இல்லே மாடா? மாடு கூட இப்படி உழைக்கிறதில்லே... கொஞ்ச நாளுக்கு முந்தி ஒரு பத்திரிகையில படிச்சேன். பெண்களுக்கு எத்தனையோ உரிமைகள் குடுத்து வெச்சிருக்கிற ரஷ்யாவிலகூட, விவாகரத்துக்குள்ளாகிற அறுபது சதவீதம் குடும்பத்துல, கணவனுக்கும் மனைவிக்குமிடையில பெண்ணுக்கு அதிகமாய் இருக்கிற வீட்டு வேலைச் சுமை காரணமா வர்ற சண்டை பூசல்களால தான் ஏற்பட்றதுன்னு, எந்த நாடா இருந்தா என்ன? எல்லா ஊர்லயும் மனுஷா ஒரே மாதிரிதான் போலிருக்கு.''

''இப்ப என்ன சொல்றே நீ? உனக்கு வேலைச் சுமை ஜாஸ்தின்னுட்டு டிவோர்ஸ் கேஸ் போடப்போறியா என்ன?' என்று ரமணன் இடிஇடியென்று சிரித்தான்.

ராஜிக்கு ஆத்திரம் பெருகியது. எப்போது என்ன கேட்டாலும் சமைத்துப் பரிமாற அதுகாறும் தான் தயங்கியே இராத நிலையில், இந்த ஒருநாள் உடம்புக்கு முடியவில்லை என்று சொன்ன பிறகும் - அதிலும் இரவு எட்டுமணிக்கு மேல் அம்மியைக் கட்டி இழுக்கிற சமையலாய்ச் சமைத்துப் போடச் சொல்லுகிறானே இவன், இவனெல்லாம் என்ன மனிதன் என்றுதான்.

'இவனுடைய 'பசிகள்' அத்தனைக்கும் ஈடுகொடுத்துக் கொண்டு, சம்பாதித்துப் போட்டுக்கொண்டு, தடுப்பை மறுப்பதால் அடிக்கடி அபார்ஷன் செய்து உடம்பை நாராக்கிக் கொண்டு, அதனால் மனசைக் கஷ்டப்படுத்திக் கொண்டு, இவன் துணிகளைத் துவைத்துப் போட்டுக் கொண்டு, குழந்தையைக் காலை மாலை இரு நேரங்களிலும் க்ரேஷில் கொண்டு போய் விட்டுக் கொண்டு, தினமும் சமைத்துப் போட்டுக் கொண்டு, கூப்பிட்ட குரலுக்கு ஏனென்று கேட்டுக் கொண்டு - இவ்வளவு செய்கிற தனக்காக இவன் செய்வது தான் என்ன? அதிகாரம்!... வெட்டி அதிகாரம்!... - ராஜிக்கு அழுகை முட்டிக் கொண்டு வந்தது. அடக்கினாள்.

''ஆமா. போடத்தான் போறேன். ஆம்படையான் என்ன பண்ணினாலும் சகிச்சுண்டிருக்கிறதுக்கு நான் ஒண்ணும் நளாயினி இல்லை. வேலைச் சுமையால் ஆம்பளைக்கும் பொம்பளைக்கும் ரஷ்யாவிலயும் அமெரிக்காவிலயும் மட்டுந்தான் தகராறு வருமோ? இங்கேயும் வரும். வேலைச்சுமை ஜாஸ்தியானதால விவாகரத்துக் கேட்ட முதல் பொம்பளைங்கிற பேரு-கெட்ட பேரு-எனக்கே கிடைக்கட்டும். கலகம் பொறந்தாத்தான் நியாயம் பொறக்கும்.''

இதற்கு முன்னால் வேலைச்சுமை பற்றிய சண்டைகள் பல தடவைகள் மூண்டதுண்டுதான். ஆனால் இறுதியில் அவளே விட்டுக் கொடுத்து வந்திருக்கிறாள். இன்று அவளது ஆத்திரம் என்ன முயன்றும் கட்டுக்கு அடங்காது போயிற்று. அடக்கி அடக்கி வைத்த உணர்வுகள் கரையை உடைத்துப் பிரளயமாய்ப் பொங்கி விட்டன. பொறுமையின் விளிம்பில் அவள் காளியாகிப் போனாள்.

''அம்மா, வுமன்ஸ் லிப் ப்ரசிடென்ட்டே! என்ன ஆச்சு உனக்கு இன்னிக்கு?''

''வுமன்ஸ் லிப்பை இளக்காரம் மட்டும் பண்ணத் தெரியறது. அது வர்றதே உங்கள மாதிரி அக்கிரமக்கார ஆம்பளைகளாலதானே? அதை ஒரு நிமிஷம் நினைச்சுப் பாருங்கோ...''

ராஜியின் குரல் திடீரென்று மிகவும் உயர்ந்து போயிற்று.

''உங்களுக்கு ஒரு வாரம் டைம் தரேன். அதுக்குள்ள யோசிச்சு ஒரு முடிவுக்கு வாங்கோ. என்னோட வீட்டு வேலைச் சுமைகள்ள எந்த அளவுக்கு நீங்களும் பங்கு ஏத்துக்கிறதா இருக்கப் போறேள்ங்கிறதைப் பொறுத்து நான் டிவோர்ஸ் கேஸ் போடறதும் போடாததும் இருக்கும். யார் வேணா என்னைப் பொல்லாதவள்னு ஏசட்டும், பேசட்டும். ஐ டோன்ட் கேர் எ பின்! பூனைக்கு யாராவது மணி கட்டணுமே! அது நானா இருந்துட்டுப் போறேன்... என் கேசைப் பத்தித் தெரிஞ்சுண்டதுக்கு அப்புறமாவது சேத்துல சுகங்காணற எருமை மாடுகள் மாதிரி சிந்தனையே இல்லாம வளைய வந்துண்டிருக்குற பொண்ணுகள் முழிச்சுக்கறாளான்னு பார்க்கறேன்!''

ராஜியின் கத்தலைப் பிரமித்துப் போய்க் கேட்டபடி நின்ற ரமணன் உதடுகள் பிரிய அவளைப் பார்த்தான். குழந்தையை வாரி எடுத்துக் கொண்டு ராஜி படுக்கப் போனாள்.

---